*Nam nāṭu*

*Malar 2, itaḻ 169*

*December 28, 1954*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ 'PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

வெளியூர்: மார்கழி 14உ புதன் (29—12—54) [இதழ் 169

மலர் 2] சென்னை: மார்கழி 13உ செவ்வாய் (28—12—54) ★ ★

## மூன்று சிஷ்யைகளுடன் சாது மறைந்தார்!

ஜோத்பூர், டிச 27—

ஜோத்பூர் அருகே புஷ்கர் என்ற யாத்திரை ஸ்தலமொன்றில், நீண்ட தாடி உடைய சாது ஒருவர், தனது மூன்று சிஷ்யைகளுடன் மறைந்துவிட்டார் என்று தெரிகிறது.

சாது தன்னுடன் சுமார் ரூ. 4,000-த்தையும் எடுத்துச் சென்றுவிட்டாராம்.

ராஜஸ்தான் முழுமையும் உள்ள போலீஸ் நிலையங்கள் அந்த சாதுவைத் தேடுகின்றனவாம். மற்ற இராஜ்யப் போலீசாருக்கும் செய்தி தெரிவிக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது.

# 'சேலத்திலா இரும்பு தொழிற்சாலை?'

## 'வெறும் மனக்கோட்டை— வீண் பிரமை!'

## 'அதற்கு வேண்டிய நிலக்கரிக்கு எங்கே போவது?'

### தொழில் — வர்த்தக அமைச்சர் கிருஷ்ணமாச்சாரியின் கிண்டலும்-கேள்வியும்

"சேலத்திலா இரும்புத் தொழிற்சாலை? அது வெறும் மனக்கோட்டை! இரும்புத் தொழிற்சாலைக்குத் தேவைப்படும் நிலக்கரி, அங்கு எங்கு இருக்கிறது?"

—இவ்வாறு, இந்திய அரசாங்க தொழில்—வர்த்தக மந்திரியாக இருந்துவரும் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார், நிருபர் கேள்வி ஒன்றுக்கு எதிர் கேள்வி மூலம் பதில் தந்துள்ளார்.

ரஷிய உதவியுடன் துவங்க இருக்கும் இரும்புத் தொழிற்சாலையை நிர்மாணிப்பதற்கு ஏற்ற இடத்தைக் குறிப்பிடும் ஆரம்ப அறிக்கை ரஷிய நிபுணர்களிடமிருந்து இந்தியப் பேரரசிற்குக் கிடைத்திருப்பதாகவும், இன்னும் முழு விளக்கம் கிடைக்கவில்லை என்றும், அவர்களுடைய விரிவான அறிக்கை எதிர்பார்க்கப்படுகிறது என்றும், மேற்படி அமைச்சர் நிருபர்களிடம் குறிப்பிட்டார்.

ஜகார்தா மாநாட்டிற்குச் சென்றுள்ள பிரதமர் நேரு, இந்தியா திரும்பினவுடன், இவ்விஷயத்தில் இறுதியான முடிவு எடுக்கப்படும் எனவும், அவர் கூறினார்.

புதிய இரும்புத் தொழிற்சாலையை நிர்மாணிப்பதற்கானத் தகுந்த இடம் இதுதான் என அந்த இடத்தை ரஷிய நிபுணர்கள் சிபார்சு செய்திருக்கிறார்கள் என்பது தெரியாது என்றாலும், இவ்வகையில் தென்னிந்தியா புறக்கணிக்கப்பட்டுவிட்டது என்பது மட்டும் திட்டமாகத் தெரிகிறது என, மேற்படி அமைச்சர் அறிவித்துள்ளார்.

## பழி வாங்கும் படலம்!

ஜகார்தா, டிச. 27—

மேற்கு நியூகினியா எந்த நாட்டுடன் இருப்பது என்பது குறித்து இந்தோனேஷியாவிற்கும் ஹாலந்துக்குமிடையே நிலவிவரும் தகராறுக்கு முடிவு காணும் பொருட்டு, இரு நாடுகளும் சமரசப் பேச்சுவார்த்தைகள் மூலம் இப்பிரச்சினைக்குப் பரிகாரம் காண வேண்டுமென இரு நாடுகளையும் கேட்டுக்கொள்கிற பிரரேபணையை ஐ.நா. நிராகரித்துவிட்டது. எனவே, டச்சு மக்களை இந்தோனேஷியர் ஒதுக்கித் தள்ளவேண்டுமென்று கோரும் விளம்பரங்கள் இங்கு எங்கும் காணப்படுகின்றன.

டச்சுக்காரர்களைப் பழி வாங்கும் பொருட்டே இந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளனவாம்.

## சிறந்த கலைஞர்களை ஒதுக்கினதின் எதிரொலி

## சென்னை அரசாங்கப் போக்கால் தமிழ் நாடகக் கலைக்கு ஏற்பட்ட இழுக்கு

### 'சிவகாமியின் சபதம்' செல்லாக் காசாயிற்று!

தேசீய நாடகப் போட்டியின் முடிவு

புதுடில்லி, டிச. 26—

தேசீய நாடக விழா இன்று முடிவுற்றது. போட்டியிட்ட நாடகங்கள் பற்றிய முடிவுகள் வெளிவந்துள்ளன.

நாடகங்கள், பழங்காலத்தியவை கிராமீய நாடகங்கள், நவீன கால நாடகங்கள் என மூன்று வகையாகப் பிரிக்கப் பட்டிருந்தன.

பம்பாய் மராத்திய சாகித்திய சங்கத்தார் அளித்த 'பகாவ் பண்ட்கி' என்ற நாடகம் பழங்காலத்திய நாடக வரிசையில் முதலாவதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

கிராமீய நாடகங்களில் "குனித் குமாரி" என்ற அஸ்ஸாமிய நாடகமும் இன்னொன்றும் மிகச் சிறந்தன என்று கூறப்பட்டது.

இந்த நாடகத்தை ஷில்லாங்கில் உள்ள அஸ்ஸாம் சங்கீத நாடகக் கழகத்தார் நடித்தனர்.

இன்னொன்று இம்பாலில் உள்ள மணிப்பூர் நாடகச் சங்கம் நடித்த "ஹௌராவ் லெசங் சாப்ஹபாய்" என்ற மணிப்பூர் நாடகமாகும்.

நவீன கால நாடகங்களில் ரவீந்திரநாத் தாகூர் எழுதிய 'ரத்த கரபி' என்ற நாடகம் முதலிடம் பெற்றது. இது கல்கத்தா 'பொஹுரூபி'யால் நடிக்கப்பட்டது.

பம்பாய் 'தியேட்டர் யூனிட்' ஆங்கில மொழியில் நடித்த 'ஓயெடிபஸ்ரெக்ஸ்' என்ற கிரேக்க நாடகம் போட்டியில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படவில்லை. ஆனாலும் அது மிகச் சிறந்த நாடகங்களில் ஒன்றெனக் கொள்ளப்பட்டது.

போட்டிகளில் முடிவு கூற பேராசிரியர் சாமுவேல் மத்தாய், காகா சாஹிப் கலேல்கர், திரு. டி. ஆர். மனோகரி ஆகியோர்கொண்ட 'நீதிபதிக் குழு' நியமிக்கப்பட்டிருந்தது.

# நெய்வேலி: வடவர் ஆதிக்கம் பூர்த்தி

## நிர்வாகக் குழுவினர் 8 பேரில் 5 பேர் டில்லியின் பிரதிநிதிகள்!

### ரூ. 58 கோடி அளவில் திட்டம் அமுலாகும்!

சென்னை, டிச. 27—

நெய்வேலி நிலக்கரியைப் பயன்படுத்த ரூ. 58 கோடி அளவில் திட்டமொன்று அமுல் நடத்தப்படுமென்றும், இத்திட்டத்திற்கான வேலைகள் ஜனவரி முதல் தேதி ஆரம்பமாகுமென்றும் தெரிகிறது.

இத்திட்டத்தை மேற்கொள்ள குழு ஒன்று நியமிக்கப்பட்டிருக்கிறது. இக்குழுவில் மத்திய சர்க்காரின் பிரதிநிதிகள் ஐந்து பேரும், சென்னை சர்க்கார் பிரதிநிதிகள் மூன்று பேரும் இருப்பார்களாம்!

இது பற்றிய முடிவுகள் சென்னை சர்க்கார் காரியாலயத்தில், மத்திய சர்க்கார்—சென்னை சர்க்கார் பிரதிநிதிகளிடையே நடைபெற்ற மாநாட்டில் முடிவு செய்யப்பட்டது.

நெய்வேலி நிலக்கரித் திட்டத்தை அமுல் நடத்தும் எட்டுபேர் கொண்ட குழுவிற்கு மத்திய சர்க்கார் பிரதிநிதி தலைவராக இருப்பாராம்.

இதன் மூலம் நெய்வேலி நிலக்கரி மீது மத்திய சர்க்காருக்கு ஆதிக்கம் அதிகரிக்கிறது எனலாம்.

குழுவின் நிர்வாக அதிகாரி சென்னையின் பிரதிநிதியாக இருப்பாராம்.

திட்டம் பற்றி மேற்கொண்டு நடைபெறும் ஆராய்ச்சிகள், ஜுன் திங்களுக்குள் முடிந்துவிட வேண்

(4-ம் பக்கம் பார்க்க)

# விவசாயப் பொருள்களின் விலை வீழ்ச்சி

## மத்திய சர்க்கார் கவலை: தடுக்க நடவடிக்கைகள்!

புதுடில்லி, டிச. 27—

விவசாயப் பொருள்களின் விலைவாசிகள் வீழ்ச்சியடைந்தால் விவசாயிகளின் ஊக்கம் குறைந்துவிடும் என்றும், 5 வருடத் திட்டத்திற்கு அந்த நிலை அபாயகரமானதாகும் என்றும் சர்க்கார் கவலையுறுகிறதாம்.

இதற்காக, விலைவாசிகள் வீழ்ச்சியைத் தடுக்க சர்க்காரே செஞ்சோளம், கம்பு, மக்காச் சோளம் போன்ற உணவு தானியங்களை உடனடியாக விலைக்கு வாங்கும் என்று தெரிகிறது.

விவசாய மந்திரியின் திட்டமொன்றின்படி, சர்க்கார் விவசாயப் பொருள்களை வாங்குவதற்கான 'மண்டி'களின் பட்டியல் தயாரிக்கப்பட்டுள்ளதாம்.

கம்பு, மக்காச்சோளம் முதலியனவற்றை சர்க்கார் உடன் விலைக்கு வாங்குவதுடன், வேர்க்கடலை, வெல்லம் ஆகியவற்றின் ஏற்றுமதியும் அனுமதிக்கப்படுவதுடன் ரயில்வே போக்குவரத்துக்கும் ஏற்பாடு செய்யப்படும் என்றும் தெரிகிறது.

ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்கு எடுத்துச் செல்வதில் உள்ள தானியக் கட்டுப்பாடு நீக்குவதுடன் போக்குவரத்து வசதிகளை அபிவிருத்தி செய்வதற்கு மத்திய சர்க்கார் உணவிலாக்கா அதிகாரிகளையும் ரயில்வே அதிகாரிகளையும் கொண்ட ஒரு கூட்டுக் கமிட்டியும் அமைக்கப்படுமாம்.

# மைசூரில் 12,000 மின்சார இலாகா ஊழியர்கள் வேலை நிறுத்தம்

## உடனே வேலைக்குத் திரும்புமாறு சர்க்காரின் எச்சரிக்கை

பெங்களூர், டிச. 27—

மைசூர் சர்க்கார் மின்சார இலாகா ஊழியர்கள் 12,000 பேர் இன்று காலை 10 மணிக்கு காலவரையறையின்றி வேலைநிறுத்தத்தில் இறங்கினர். 'தங்கள் கோரிக்கைகளில் சர்க்காருடன் சமரசம் சாத்தியமில்லை,' என்ற பின்னர் வேலை நிறுத்தம் துவங்கியது.

மருத்துவ விடுதிகள், குடிதண்ணீர், தபால் தந்தி இலாகா இவை போன்ற முக்கிய தேவைகளுக்கு மின்சாரம் அளிக்க சர்க்கார் எல்லா முயற்சிகளையும் செய்வதாக சர்க்கார் பிரதம எஞ்சினீயர் ஜார்ஜ் சாண்டி கூறினர். கோலார் தங்க வயலில் மின்சாரம் போதிய அளவு கிடைக்கிறதாம்.

இதற்கிடையில் சர்க்கார் 352 இராணுவ ஊழியர்களின் சேவையை பெற்றுக் கொண்டிருக்கிறது.

ஓய்வு பெற்ற சர்க்கார் எஞ்சினீயர்கள் 25 பேர் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கின்றனர்.

வேலை நிறுத்தம் செய்துள்ளவர்களை சர்க்கார் எச்சரித்திருக்கிறது.

மைசூர் சர்க்காரின் மின்சார இலாகா வேலைகள் அனைத்தும் 'அவசர சர்வீசுகள்' என்றும், அத்தியாவசியமானவை என்றும் ஏற்கனவே மத்திய சர்க்கார் 1947ம் ஆண்டு இராணுவ (அவசர) சர்வீசுகள் சட்டப்படி பிரகடனம் செய்துள்ளனர்.

வெளியாரின் தூண்டுதலினால் ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்துள்ளது வருந்தத்தக்கது என்று பிரதம எஞ்சினீயர் கூறியுள்ளார்.

டிசம்பர் 29-ந் தேதி காலை 7-30 மணிக்கு வேலைக்குத் திரும்பாவிட்டால், சர்க்கார் ஒழுங்கு நடவடிக்கை எடுக்குமென்று எச்சரித்துள்ளது.

ஜாக், சிவசமுத்திரம், விஸ்வே

(4-ம் பக்கம் பார்க்க)

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 28—12—1954 செவ்வாய்


# அர்த்தநாரீஸ்வரர்- உருவம் அல்ல; உள்ளம்!

"சோஷலிசப் பாதையில் நாட்டை அழைத்துச் செல்வதே நமது நோக்கம்; நாட்டின் பொருளாதார அமைப்பு சோஷலிசப் பொருளாதார அமைப்பே" என்று, பண்டித நேரு, சென்ற சில தினங்களுக்கு முன் பாராளுமன்றத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

இந்தியாவின் பொருளாதாரக் கொள்கை பற்றி விடுத்த அறிக்கையில், இந்திய சர்க்காரின் நிதி அமைச்சர் தேஷ்முக், "இந்திய சர்க்கார், 1948 முதல் சோஷலிசப் பொருளாதாரக் கொள்கையைத்தான் கடைப்பிடித்து வருகிறது," என்று கூறினர்.

பண்டித நேரு, ஒரு மாத காலமாக சோஷலிசம் பற்றிப் பேசி வருவதை பொதுமக்கள் நன்கு அறிவார்கள்; இந்தியப் பாராளுமன்றமும், "இந்தியா சோஷலிசப் பாதையை நோக்கிச் செல்ல வேண்டும்," என்று, தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியிருக்கிறது.

1948-ம் ஆண்டில் வெளியிடப்பட்ட பொருளாதாரக் கொள்கையை மீண்டும் வலியுறுத்த வேண்டிய அவசியம் இந்திய சர்க்காருக்கு இப்போது ஏன் ஏற்பட்டது என்று கேட்கத் தோன்றலாம்.

இந்தியத் தொழில் அதிபர்களில் ஒருவரான பிர்லா, ஒரு இரும்புத் தொழிற்சாலை, ஒரு எஃகுத் தொழிற்சாலை ஆகிய இரண்டுக்கும் அனுமதி கோரி, இந்திய சர்க்காரிடம் திட்டம் ஒன்றைத் தந்ததும், அந்தப் பேராசைத் திட்டங்களை இந்திய சர்க்கார் மறுத்ததும் அனைவரும் அறிந்த ஒன்றாகும். இதை ஒட்டி இந்திய சர்க்காரிலுள்ள அமைச்சர் ஒருவரின் இராஜிநாமா எச்சரிக்கை ஒன்று தோன்றி, பின்னர் அது புதைந்து போனதும் எல்லோருக்கும் தெரிந்த உண்மை.

இந்த நிகழ்ச்சியினால் இந்தியாவில் உள்ள முதலாளிகளின் மனதில் ஏற்பட்ட சந்தேகத்தைப் போக்க இந்திய சர்க்கார் தனது பொருளாதாரக் கொள்கையைப் பாராளுமன்றத்தில் அறிவித்தது.

ஆனால், 'இந்தியா சோஷலிசப் பாதையை நோக்கிச் செல்லுகிறது,' என்பதை, நாட்டிலே நடைபெறும் பல நிகழ்ச்சிகள், 'அது சரியான வாதம் அல்ல' என்று எடுத்துக்காட்டுவதாகவே இருக்கிறது.

இந்நிலைமையைத்தான், பாராளுமன்றத்தில் பல உறுப்பினர்கள் எடுத்துக்காட்டினர்.

"இதுவரை சர்க்கார், தனி நபரின் தொழிலை அபிவிருத்தி செய்யவே உழைத்து வந்திருக்கிறது; நாட்டில் உள்ள சில முதலாளித்துவ அமைப்பு நிலையங்களின் ஆதிக்கத்தின்கீழ் உள்ள கம்பெனிகளின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே போகிறது; அதே நேரத்தில் நமது பிரதம மந்திரி, '1948-ம் ஆண்டு பொருளாதாரக் கொள்கை சோஷலிசக் கொள்கை,' என்று கூறுகிறார்; இப்படிச் சொல்லப்படும் சோஷலிசம் ஒரு புதுவித அதிசய சோஷலிசமாக உள்ளது," என்று ஆச்சாரியா கிருபளானி கூறினர்.

"இன்சூரன்ஸ் கம்பெனிகள், நெசவுத் தொழிற்சாலைகள், சணல் தொழிற்சாலைகள் ஆகியவைகளை சர்க்காரே எடுத்துக்கொள்ள வேண்டும்; சர்க்கார் இன்னும் இருபது ஆண்டுகளுக்கு இத்தொழில்களைத் தொடப் போவது கிடையாது என்றால், பண பலம், ஆதிக்க மனப்பான்மை இவைகளுடன் தற்போது நாட்டில் பலர் செலுத்தும் ஆதிக்கம் நிச்சயம் நீடிக்கும்,' என்று தோழர் காட்கில் எடுத்துக் காட்டினர்.

"யார் எது சொன்னாலும் அதுபற்றிக் கவலையில்லை; இந்தியா சோஷலிசம் நோக்கி நடை போடுகிறது," என்று பண்டிதர் கூறிவிட்டார்.

இந்திய சர்க்காரின் நிதி அமைச்சர் தேஷ்முக், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் பற்றிக் குறிப்பிடுகையில்," அத்திட்டப்படி, இந்தியாவில் ரூ. 5000 கோடி மூலதனம் இடப்படும்," என்று கூறினர்.

பிர்லாவின் திட்டங்களை இந்திய சர்க்கார் மறுத்துவிட்டார்களே என்று கவலையுடன் காணப்பட்ட முதலாளிகளுக்கு, "கவலைப்படாதீர்; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உங்களுக்கும் இடம் உண்டு," என்று நிதி அமைச்சர் தேஷ்முக் அபயம் அளித்திருக்கிறார்; அதே நேரத்தில், 'இந்தியாவின் பொருளாதார அமைப்பு, சோஷலிசம் என்ற பாதையில் செல்லுகிறது,' என்ற நேருவின் கருத்தையும் வலியுறுத்துகிறார். அவரது சொல்லும், செயலும் ஒத்துவரவில்லை என்பதையே நாம் எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

நாடு சோஷலிசத்தை நோக்கிச் செல்கிறது—ஆட்சிபீடத்திலிருப்போர் சொல்கிறார்கள்—இதைக் கேட்டும் ஏழை மகிழ்வான்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், ரூ. 5,000 கோடி மூலதனத்திற்கு வகை செய்கிறது—பெருமையாக நிதி அமைச்சர் பேசுகிறார்—பூரிப்புடன் படிப்பார்கள் காங்கிரசை ஆதரிக்கும் பக்தர்கள்.

ஆனால், அந்த ஐயாயிரம் கோடி ரூபாயில், தனிப்பட்ட முதலாளிகளுக்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை 2,500 கோடி ரூபாய்களாம்!

'சோஷலிசப் பாதை நோக்கிச் செல்கிறோம்,' என்று கூறுபவர்கள், திட்டமிட்டுள்ள மூலதனத் தொகையில் பாதி அளவை முதலாளிகளுக்கு வழங்கியிருக்கிறார்கள் — இது, பூரிப்பு தரும் செய்தியாகுமா? முதலாளியின் ஆதிக்கம் குறையும் என்பதற்கு அறிகுறியாகுமா?—என்றுதான் நாம் கேட்க விரும்புகிறோம்.

ஏழையின் வாழ்வைச் சுரண்டி, அந்தச் சுரண்டலின் மூலம் வளர்ந்து, சர்க்காரையே ஆட்டிப் படைக்கும் வல்லமை கொண்ட பொருளாதார அமைப்பிற்குத்தான் 'முதலாளித்துவ அமைப்பு' என்று பெயர்.

நாட்டுக் குடிமகனை யாரும் சுரண்டாமல் பாதுகாத்து, தொழில்களை சர்க்காரே ஏற்று நடத்தும் பொருளாதார அமைப்பிற்குத்தான் 'சோஷலிச அமைப்பு' என்று பெயர்.

ஆனால், 5,000 கோடி ரூபாயில், 2,500 கோடி ரூபாயை தனிப்பட்ட முதலாளிகளுக்கு ஒதுக்கியிருக்கிறது நேரு சர்க்கார்; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், இப்படித்தான் இருக்குமென்கிறார் நிதி அமைச்சர் தேஷ்முக்; முதலாளித்துவமற்ற 'சோஷலிசம்' இதில் காணப்படுகிறதா?

ஆட்சியாளர்கள் கூறும் சோஷலிச அடிப்படைத் தத்துவத்தின் கருத்தை ஒருவர் ஆதரித்துள்ளார்; ஆதரித்த அந்த மனிதர் அரசியல்வாதியல்ல; சோஷலிசம் நாட்டிற்குத் தேவை என்று உழைக்கும் உத்தம குணம் கொண்டவரும் அல்ல; அவர், இந்தியாவின் பெரும் புள்ளிகளில் ஒருவர்; முதலாளி—முதலாளித்துவ அமைப்பு பாதுகாக்கப்பட வேண்டுமென்பதிலே கண்ணும் கருத்துமாக இருப்பவர்—அவர்தான் ஜி. டி. பிர்லா—அவர் பாராட்டியிருக்கிறார், பண்டித நேரு அரசாங்கம் தயாரித்து இருக்கும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை!

"அடுத்து வருகிற ஐந்தாண்டுத் திட்டத்தில், தனிப்பட்ட முதலாளிகளுக்கு மூலதனத் தொகையான ரூ. 5000 கோடியில் பாதியளவைத் தனி நபரின் தொழில்களுக்கு ஒதுக்கப்பட்டிருப்பது, தனி நபர் முயற்சிக்குவிடப்பட்ட சவால் ஆகும்."

இது, பிர்லாவின் பாராட்டுரை! இரண்டாது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு இந்தியாவின் முதலாளி ஒருவர் வழங்கிய மதிப்புரை!!

முதலாளிகளே திகைக்கிறார்கள்—2,500 கோடி ரூபாயை நம்மால் மூலதனமாகத் திரட்ட முடியுமா—என்று! பண்டித நேரு பேசுகிறார்—இது, 'சோஷலிசப் பொருளாதாரக் கொள்கை'—என்று!

முதலாளி பாராட்டுகிறார்—'இது நமக்கு விடப்பட்ட சவால்'—என்று! காங்கிரசின் அதிபர் கூறுகிறார்—'இது ஏழையை மகிழ்விக்கும் திட்டம்'—என்று!

சமப் பங்கீடு அளித்திருக்கிறார்கள்—சர்க்காரும், தனி மனிதனும் ஆளுக்குப் பாதி தொகை மூலதனம் போடலாம் என்கிறார்கள்.

சிவபெருமான் தன் வாழ்க்கைத் துணைவிக்குப் பாதி உடலைத் தந்து, 'அர்த்தநாரீஸ்வரர்' என்று பெரும் பெயர் பெற்றாராம்—புராணம் கூறுகிறது.

முதலாளிக்கு பாதி; சர்க்காருக்கு மிச்சம்—என்று திட்டமிடப்படுகிறது — 'இதுதான் சோஷலிசம்' என்று பண்டிதர் பேசுகிறார்.

"தனி நபரின் தொழிலையும் கட்டுப்படுத்திக்கொண்டு, சர்க்கார், தொழிலையும் விருத்தி செய்யாமல் நாம் முன்னேற முடியாது! தனிப்பட்டவர்களுக்கு தொழில் உரிமை அளித்துவிட்டு, அதில் தலையிட்டு, உரிமைகளை மறுத்து, அவர்களை தொழில் நடத்தச் சொல்வது மடமை; அப்படிச் செய்தால் எல்லாமே பொது அமைப்பாக (சர்க்கார் தொழில்களாக) மாறிவிடும்" என்கிறார் பண்டித நேரு.

எல்லாம் சர்க்கார் சொத்தாகிவிடுமாம்—அது கூடாதாம்—ஆனால், சோஷலிசப் பாதை நோக்கிச் செல்ல வேண்டுமாம்—இதில், 'தத்துவம்' எங்கே இருக்கிறது? நோக்கம் எங்கே பொருந்துமாறு உள்ளது?

"என்னால் செய்ய முடியாது என்கிறபோது, மற்றவர்களும் செய்யக்கூடாது என்று தடுப்பது நல்லதல்ல"—இதுவும் அவர் பேசியதுதான்!

சர்க்காரால் செய்ய முடியாது; ஆனால், அந்த சர்க்காரின் பாதுகாப்பில், தன் ஆதிக்கத்தை வளர்க்கும் தனி மனிதனால், சர்க்காரால் நடத்த முடியாத தொழில்களை நடத்த முடியுமாம். 'இப்படி நடத்த அனுமதிக்கும் கொள்கைக்குத்தான் சோஷலிசம் என்று பெயர்,' என்கிறார், இந்தியாவின் பிரதிநிதி!

'ஏழை மனிதனே! நீ ஏன் அஞ்ச வேண்டும்? நாங்கள் சோஷலிசம் நோக்கிச் செல்கிறோம்,'—என்கிறது இந்திய சர்க்கார்!

"முதலாளிகளே! மகிழ்வீர்; ரூ. 2,500 கோடி நமக்கு விடப்பட்ட ஒரு சவால்; தயார் செய்வீர்'—என்று பாராட்டுகிறார் பிர்லா!

இந்தச் செப்படி வித்தை எப்படி சோஷலிசமாகும் என்பதை மக்கள்தான் தீர்மானிக்க வேண்டும்.

# மனித உழைப்பைப் பயன்படுத்த வேண்டியது முதற் கடமை

## 'எஞ்சினீயரிங்' கல்வியில் சீரமைப்புத் தேவை

### டாக்டர் அழகப்ப செட்டியார் கருத்து

"மனித உழைப்பு மிக மலிந்துகிடக்கிற நமது நாட்டில், திட்ட வேலைகளுக்காகக் கன ரக இயந்திரங்களை இறக்குமதி செய்கின்ற விஷயத்தில் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்;

"இயந்திரங்களை உபயோகிப்பதால், செய்ய வேண்டிய வேலைகளை வெகு துரிதமாக செய்து முடித்துவிடலாம் என்பது உண்மையே; ஆனால், இவ்வேற்பாட்டினால் நாம் அன்னிய நாட்டு இயந்திரங்களை மட்டுமல்லாமல், அயல் நாட்டு நிபுணர்களையும் எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்;

"நாட்டிலே வேலையில்லாத் திண்டாட்டம் பெருகிக் கொண்டே வருகிற இச்சமயத்தில் நம்மிடையேயுள்ள—மலிவாகக் கிடைக்கிற மனித உழைப்பைப் பயன்படுத்திக்கொள்வது நமது முதற் கடமையாகும். மேலும், முற்றிலும் அவசியப்படுகிற அளவுக்கு மட்டுமே இயந்திரங்களை இறக்குமதி செய்வது என்ற கட்டுப்பாடும் மிக இன்றியமையாததாகும்."

—இவ்வாறு, இந்திய எஞ்சினீயர்கள் கழக சென்னை நிலையத்தின் 32-வது ஆண்டு மகாசபைக் கூட்டத்தை ஆரம்பித்து வைத்துப் பேசிய டாக்டர் ஆர். எம். அழகப்பச் செட்டியார், நாட்டின் தேவைகளுக்கேற்ப எஞ்சினீயரிங் (பொறி இயல்) படிப்பில் மாறுதல்கள் இருக்க வேண்டுமென வலியுறுத்திப் பேசுகையில் குறிப்பிட்டார்.

தொடர்ந்து அவர் மேலும் பேசியதாவது:—

"நமது நாட்டிலுள்ள பலவேறு பல்கலைக் கழகங்களிலுமுள்ள எஞ்சினீயரிங் பட்டம் பெறுவதற்கான பாடத் திட்டங்கள் ஒரேமாதிரியாக இல்லை. எஞ்சினீயரிங் கல்வியைத் திருத்தி அமைக்கும் பிரச்சினைகள் எதுவும் அகில இந்திய ரீதியிலேயே கவனிக்கப்பட வேண்டும். இக்கல்லூரிகளில் நமது தொழில்களுக்கும், பிற துறைகளுக்கும் தேவைப்படுகின்ற சிறந்த பயிற்சியும் அறிவும் அளிப்பதற்கான பாடத் திட்டங்கள் திருத்தியமைக்கப்பட வேண்டும்.

பெரும்பான்மை எஞ்சினீயரிங் பட்டதாரிகள், தத்தம் துறைகளில் புதிய அபிவிருத்திகள் பற்றி யோசிக்கக்கூட முடியாதவர்களாக இருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட பட்டதாரிகளுக்கு மார்க்கெட்டில் மதிப்புக் குறைவாக இருப்பது இயற்கைதான். இதனால்தான், அவர்களும் வேலையில்லாமல் கஷ்டப்படுகிறார்கள்—'வேலைக்கு அமர்த்த முடியாதவர்'களாகவும் இருக்கிறார்கள்.

இவ்விதக் குறைபாடுகள் எங்கிருந்து, எவ்வாறு கிளம்புகின்றன என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியமாகும். பாடத்திட்டங்களிலோ, பாடங்கள் போதிக்கப்படும் முறைகளிலோ அல்லது கல்லூரிகளில் மாணவர்களைக் 'கண்மூடி'த்தனமாகச் சேர்த்துக் கொள்வதிலோதான் இவ்விதக் குறைபாடுகள் ஏற்படுகின்றன. மாணவர்களின் கல்வித் 'தரத்'துக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில்லை.

சில குறிப்பிட்ட தரமும், தொகையுமுள்ள தொழில் நுணுக்கம் தெரிந்தவர்களைக் கட்டாயமாக வேலைக்கமர்த்திக் கொள்ள வேண்டுமென சர்க்கார் சட்டம் இயற்றுவதுகூட ஓரளவுக்குப் பயன் தருவதாக இருக்கலாம்.

"குடிசைத் தொழில் அல்லது பெரிய ஆலைத் தொழில் இவற்றுள் ஒன்றின் அபிவிருத்திக்கு மட்டுமே நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதால் இந்தியாவிலுள்ள இப்பிரச்சினைகளுக்குப் பரிகாரம் கண்டுவிட முடியாது. அவ்விரு பிரிவுத் தொழில்களும் இணையாக அபிவிருத்தி செய்யப்பட்டு இரண்டும் ஒன்றாகச் சேர்ந்தே இயங்கவிடப்பட வேண்டும். சிறு குடிசைத் தொழில்களோடு பெரிய ஆலைத் தொழில்கள் சமாதானமாக இணைந்திருக்க வேண்டும்."

# "நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்க வேண்டும்"

'பெரும் பெரும் ஆற்றுப் பள்ளத்தாக்கு அணைத் திட்டங்களுக்கு தற்போது வசதியில்லை என்றாலும், இப்போதுள்ள திட்டங்களையே அபிவிருத்தி செய்வதிலும், விளுகக் கடலில்

(4-ம் பக்கம் பார்க்க.)



# மக்கள் உடல் நலத்திற்கு ஊறு செய்யும் போலி மருந்துகளைத் தடுக்க வேண்டும்

## டாக்டர் சென் எச்சரிக்கை

லட்சுமணபுரி, டிச. 26—

"மக்களின் உடல் நலத்தையும், பொருளாதாரத்தையும் பாதிக்கிற போலி மருந்துகள் நாட்டில் நடமாடுவதைத் தடுக்க மத்திய, மாநில அரசாங்கங்கள் உறுதியான நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும்;

"போலி மருந்துகள் அறிவிக்கப்படுவதினால் இப்போட்டி காரணமாக வைத்தியத் துறையில் தேர்ச்சி பெற்றவர்கள் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். போலி மருந்துகள் உடனடியாக திறம்பட தடுக்கப்படாவிட்டால் அவை வளர்ந்து உரம்பெற்று, வைத்தியத் தொழில் நடத்த அனுமதி பெற்று பதிவு செய்துகொள்வதற்கு போதிய ஊக்கம் ஏற்படுவதில்லை;

"போலி மருந்துகளைத் தடுப்பதுடன், அவை பற்றிய விளம்பரம் செய்வதையும் சட்ட விரோதமாக்க வேண்டும்; அப்படிச் செய்வதால் வைத்தியத் தொழிலுக்கு மட்டுமின்றி, நாட்டு மக்களுக்கும், நேர்மைக்கும், உண்மைக்கும் பெரும் வெற்றியாகும். பத்திரிகைக் கமிஷன் இதுபற்றிக் குறிப்பிட்டு சிபாரிசு செய்திருப்பது மகிழ்ச்சிக்குரியதே,"

—என்று, அகில இந்திய வைத்திய மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய அகில இந்திய வைத்தியக் கவுன்சில் தலைவர் டாக்டர் சென் குறிப்பிட்டிருக்கிறார்.

தொடர்ந்து பேசுகையில் அவர் குறிப்பிட்டதாவது:—

"தற்கால வைத்தியக் கலை பற்றி நிச்சயமான ஒரு முடிவை செய்ய வேண்டும். கண்டவர்கள் எல்லாம் வைத்தியத் தொழிலில் 'புறவாசல்' வழியாக நுழைந்துவிடக் கூடாது. வைத்தியத் தொழிலில் புகுவதற்கு ஒருவழிதானிருக்க வேண்டும்.

விஞ்ஞான முறையில் உள்ள தற்கால வைத்தியமே மற்ற துறைகளின் ஆராய்ச்சி உண்மைகளையும் பயன்படுத்திக் கொள்ள முடியும். ஆனால் மற்ற முறைகள் பொது நலனை உத்தேசித்து அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிற்கும் மேற்பார்வைக்கும் உட்பட்டிருக்க வேண்டியது அவசியமாகும்.

தடுக்கக்கூடிய நோய்களைத் தடுப்பதற்கு இதுவரை அரைகுறையான நடவடிக்கைகளே மேற்கொள்ளப்பட்டுள்ளன."

க்ஷயரோகத் தடுப்பிற்காக அரசாங்கம் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகள் பற்றி டாக்டர் சென் கூறியிருக்கிறார்:—

"தற்போது உபயோகிக்கப்படும் பி. வி ஜி. ஊசி போடும் முறைகள் அதிக செலவாகுபவை என்பதுடன் விரைவில் பலன் தருவதாகவும் இல்லை. ஆகவே சோவியத் ரஷ்யா பிரேஸில் ஆகிய நாடுகளில் உபயோகிக்கும் முறைகளை நாமும் பின்பற்றலாம். இவைபற்றி சர்க்கார் ஆராய்ச்சி நடத்திப்பார்க்கலாம்.

மாவட்டங்கள், மாநிலங்கள், மத்திய அரசாங்கத் தலைநகர் இங்கெல்லாம்கூட வைத்திய சுகாதார ஆலோசனைக் கவுன்சில்களை அமைப்பது நலம்.

மேலும் அவர் தொடர்ந்து கூறியதாவது:—

மேனாட்டு மருத்துவ முறை இப்போது வெகுவாக முன்னேறிவிட்டிருக்கிறது. ஆனால், நாம் மருத்துவத் துறைகளில் மிகவும் பின் தங்கியேதான் இருக்கிறோம். எனவே, அத்துறைகளில் நாம் பெரிதும் அபிவிருத்திகளைச் செய்துகொள்ள வேண்டியது மிக மிக அவசியமானதொன்றாகும்."

★

## "மருத்துவ துறையில் பின்தங்கிவிட்டோம்"

மாநாட்டை ஆரம்பித்துவைத்து பேசுகையில் உ. பி. முதலமைச்சர் கோவிந்த வல்லப பந்த் கூறியதாவது:—

"இந்தியா வைத்திய ஆராய்ச்சி துறைகளில் முன்னேறிக் கொண்டே வந்தாலும், இப்போதுள்ள அந்தமுன்னேற்றம் போதுமானதாகாது.

"மருத்துவர்கள் மிகப் பொறுப்பு வாய்ந்தவர்களாவர். ஏனெனில் வருங்கால மக்கள் எல்லோரும் சுகமாக வாழ்வது அம் மருத்துவர்களின் வைத்தியத் திறமையைப் பொறுத்தேயுள்ளது. எனவே, மருத்துவர்கள், தங்கள் கடமைகளைச் சரிவர— மக்களுக்குத் தொண்டாற்றும் உணர்வுடன் செய்யவேண்டும். அவர்கள் நோயாளிகளின்மேல் அன்பும் பரிவும் காட்டி அவர்களைக் குணப்படுத்த வேண்டும். அதுமட்டுமல்லாமல், அவர்கள் பல்வேறு மருத்துவ முறைகளை ஆராய்ந்து அவற்றை விஞ்ஞான முறையில் பயன்படுத்த முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்."

# காங்கிரசிலிருந்து இராமகிருஷ்ண ராஜு ராஜிநாமா!

## அபேட்சகர் பொறுக்கியதில் ஏற்பட்ட வெறுப்பு

சித்தூர், டிச. 26—

ஆந்திர காங்கிரசின் முக்கிய தலைவர்களில் ஒருவரான ஆர். பி. இராமகிருஷ்ண ராஜு காங்கிரசிலிருந்து விலகிவிட்டார் என்று தெரிகிறது.

இவர் சென்னை மேல்சபையின் முன்னாள் தலைவராவார்.

சித்தூர் மாவட்டத்தில் காங்கிரஸ் அபேட்சகளை பொறுக்கியதில் இவருக்குக் காங்கிரசார் மீது வெறுப்பு ஏற்பட்டதாம்.

இவர் சுயேச்சையாக தேர்தலில் போட்டியிட ஆலோசித்து வருகிறார் என்று கூறப்படுகிறது.

# ஆந்திராவில் பொதுத் தேர்தல்

## 'காங்கிரஸ் ஐக்கியமுன்னணி'யின் அபேட்சகர்கள்

கர்னூல், டிச. 25—

ஆந்திர தேர்தல்களுக்காக காங்கிரஸ் அமைத்துள்ள கூட்டு முன்னணியில் பிரகாசம் மந்திரி சபையில் இருந்த 7 பேர்களுக்கும், கலைக்கப்பட்ட சபையில் காங்கிரஸ் அங்கத்தினர்களாக இருந்த 46 பேர்களுக்கும் மீண்டும் போட்டியிட இடம் கிடைத்திருக்கிறது.

இத்துடன், சென்னையிலிருந்து பிரியா முன்னர் மந்திரிகளாயிருந்த பி. கோபால் ரெட்டி, காளா வெங்கட் ராவ், சந்திரமௌலி ஆகியோரும், சட்டசபை உதவி தலைவராயிருந்த அம்மண்ணராஜு ஆகியோரும், ஆந்திர சட்டசபைத் தலைவராயிருந்த வெங்கட்ராமய்யாவும், அபேட்சகர்கள் பட்டியலில் இடம் பெற்றுள்ள முக்கியமானவர்களாகும்.

பிரகாசம் மந்திரி சபைக்கு எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது வாக்களித்த மல்லு சுப்பா ரெட்டி, வெங்கட ரெட்டி (ராயலசீமா சுயேச்சைகள்) பி. ராமகிருஷ்ண ரெட்டி, பா. பன்னதோரா என்ற இரு பிரஜா கட்சி அங்கத்தினர்கள் ஆகியோரும் கூட்டு முன்னணியின் சார்பில் அபேட்சை பெற்றிருக்கின்றனர்.

அதேமாதிரி நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது வாக்களித்து பிரகாசம் மந்திரி சபையை வீழ்த்திய சங்கரரெட்டி, சுப்ரமணியேஸ்வர ராவ் ஆகியோருக்கு இடம் தரப்படவில்லை.

காங்கிரஸ், பிரஜா, கிருஷிக் லோக் ஆகிய கட்சியினர் அமைத்துள்ள 'ஐக்கிய முன்னணி' தயாரித்துள்ள அந்த அபேட்சகர் பட்டியலில் மூன்று முகம்மதியர்களும், நான்கு பெண்களும் இடம் பெற்றிருக்கின்றனராம்.

கடந்த சட்டசபையில், முஸ்லிம் அங்கத்தினர்களே இருக்கவில்லை என்ற குறையைப் போக்குகிற வகையில் இந்தச் சட்டசபை தேர்தலுக்காவது மூன்று பேர் இடம் பெற்றிருக்கின்றனர் என்ற வகையில் முஸ்லிம் தலைவர்கள் மகிழ்ச்சி தெரிவித்திருக்கின்றனராம்.



# அமெரிக்க கம்யூனிஸ்டு கட்சி சோவியத் ஆதிக்கம் கொண்டதே!

## மெகரான் சட்டத்தின் மீது அப்பீல் மன்றத்தின் தீர்ப்பு!

### சட்டம் செல்லத்தக்கது என்று நீதிபதிகள் கருத்து

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள கம்யூனிஸ்டுகள் தங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டுமென்று கோருகிற 'மெகரான் சட்டம்' செல்லத்தக்கது என்று அமெரிக்க அப்பீல் நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது.

'இச்சட்டம் செல்லுபடியாகுமா?' என்று விசாரணை செய்த மூன்று நீதிபதிகளில், இருவர் ஆதரவாகவும், ஒருவர் எதிராகவும் தீர்ப்பளித்துள்ளனர்.

1951-ல் நிறைவேற்றப்பட்ட இச்சட்டம், 'அமெரிக்க கம்யூனிஸ்டு கட்சி சோவியத்தின் ஆதிக்கத்திற்குட்பட்டது,' என்பதை ஒப்புக்கொண்டு, கம்யூனிஸ்டுகள் தங்கள் பெயரைப் பதிவு செய்து கொள்ள வேண்டுமென்று கோருகிறது.

இதன்படி, அமெரிக்க நீதி இலாகாவிடம் கம்யூனிஸ்டு கட்சி தனது நிர்வாகிகளின் பெயர்ப் பட்டியலைத் தந்து, பண வரவு—செலவுகளுக்கு கணக்கு காண்பிக்க வேண்டுமென்று கூறுகிறது.

'கம்யூனிச நடவடிக்கை குழு,' 'கம்யூனிச முன்னணி,' போன்றவைகளும் பதிவு செய்துகொள்ள வேண்டுமென்று அச்சட்டம் கோருகிறது.

'இச்சட்டம் செல்லுபடியாகாது,' என்று தீர்ப்பளித்த நீதிபதி, அமெரிக்க அரசியல் சட்ட ஐந்தாவது திருத்தத்தின்படி, 'எந்த மனிதனையும், அவனுக்கு விரோதமாகச் சாட்சியம் கூற அனுமதிக்கக் கூடாது,' என்று குறிப்பிடுவதை எடுத்துக்காட்டியுள்ளார்.

அமெரிக்க அரசியல் சட்டப்படி, 'மெகரான் சட்டம் செல்லத்தக்கது,' என்று கிடைத்திருக்கிற தீர்ப்பின் மீது அமெரிக்க கம்யூனிஸ்டு கட்சி, அமெரிக்க உயர் நீதி மன்றமான 'சுப்ரீம் கோர்ட்டு'க்கு அப்பீல் செய்யும் என்று சொல்லப்படுகிறது. அப்பீல் மன்றத்தின் தீர்ப்பு இதற்கு வகை செய்திருக்கிறது.

[கம்யூனிஸ்டுகளை ஒடுக்க அமெரிக்க செனட் சபை உறுப்பினர் மெகரான் என்பவர் இச்சட்டத்தைக் கொண்டுவந்தார். அவரது பெயராலேயே இச்சட்டம் அழைக்கப்படுகிறது]

# பிரிட்டிஷ் விடுதியில் இந்தியருக்கு அனுமதி மறுப்பு

## தடுக்க ஆசை இருக்கிறதாம்; ஆனால் அதிகாரமில்லையாம்!

புதுடில்லி, டிச. 23—

"பிரிட்டனில் உள்ள உணவு விடுதிகளில் இந்தியர்களை அனுமதிக்க மறுப்பது பற்றி லண்டனிலுள்ள இந்தியத் தூதவர், சர்க்காரிடம் பல தடவை எடுத்துக் காட்டி பரிகாரம் தேட முயற்சித்திருக்கிறார்,"

என்று இந்திய மேல் சபையில் கூறப்பட்டது.

பிரிட்டிஷ் சர்க்கார் எந்தவிதமான நிறபேதத்தையும் கண்டிக்கிறதாம். குறிப்பாக காமன்வெல்த் மக்களிடையே காட்டப்படும் வேற்றுமைகளைக் கண்டிக்கிறதாம்; ஆனால், உணவு விடுதிகளில் இந்தியர்களை அனுமதிக்க மறுப்பதைத் தடுக்க அதிகாரம் இல்லையாம்.

## சர்வகட்சி கண்டன ஊர்வலம்-பொதுக்கூட்டம்

அரக்கோணம், டிச. 24—

19—12—54 மாலை 4 மணிக்கு சுவால்பேட்டை கொடி சதுக்கத்திலிருந்து புதிய நாடக மசோதாவை எதிர்த்து, திராவிடர் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், கம்யூனிஸ்டு கட்சி ஆகிய சர்வ கட்சி கண்டன ஊர்வலம் கட்சிக்கொடிகளுடன் புறப்பட்டு நகரின் முக்கிய வீதிகளின் வழியாக, கோஷங்களை எழுப்பிக்கொண்டு, மார்க்கெட் மைதானத்தை அடைந்தது. அங்கு தோழர் காதர் மைதீன் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் பிச்சையன் நாடக மசோதாவால் ஏற்படும் தீங்கினை எடுத்துக்காட்டி சொற்பொழிவாற்றினர். தலைவர் முடிவுரைக்குப் பின், புதிய நாடக சட்ட மசோதாவைக் கண்டனம் செய்தும், அரக்கோணம் நகரில் பொதுக் கூட்டங்கள் நடத்த போதுமான இடவசதி இல்லாததால், பொது இடம் ஒன்றை ஒதுக்கி பல கட்சியினருக்கும் பயன்படச் செய்யுமாறு பஞ்சாயத்துக் குழுவினரைக் கேட்டுக் கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## அறிவிப்பு

கோவை திராவிட பஞ்சாலைத் தொழிலாளர் கழகநடவடிக்கைகள் தெரியவும், அதனுடன் தொடர்பு கொள்ளவும் விரும்புவோர், கீழ்க்காணும் முகவரிக்கு எழுதித் தெரிந்துகொள்ளலாம் என்று அறிவிக்கப்படுகிறது.

முகவரி: இரா. சுந்தரம், (அமைப்புக் குழு அமைப்பாளர்), திராவிடப் பஞ்சாலைத் தொழிலாளர் கழகம், 30/277, செல்வபுரம், கோயம்புத்தூர்.

# வட்டார போதனமொழிகள் எதுவானாலும் ஆங்கிலத்தை தவிர்க்க இயலாது

## ஆங்கில மொழியின் இன்றியமையாமை பற்றி கல்வித்துறை அலுவலர்

சென்னை, டிச. 27—

**"நம்முடைய வட்டார மொழி எதுவாக இருந்தாலும், நமது பள்ளிகளில் எது போதனமொழியாக இருந்த போதிலும், உலக மொழியான ஆங்கிலத்தைத் தவிர்க்க நம்மால் இயலாது."**

—இவ்வாறு, ஆங்கில மொழியின் நிலையை சென்னை அரசாங்கக் கல்வித்துறை தலைமை அலுவலர் தோழர் நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் அறிவித்தார்.

சென்னை பிரிட்டிஷ் தூதுவர் அலுவலகத்தின் சார்பில் நடத்தப்பெறும் ஆங்கில மொழிப் பயிற்றுவிக்கும் புத்துணர்வு கூட்டத்தை, மேற்படி அலுவலர் துவக்கி வைத்து மேலும் கூறியதாவது :—

"இங்கிலாந்து மக்களின் தேசிய மொழியாக மட்டும் இன்று ஆங்கிலம் இருக்கவில்லை. உலகத்தின் இரண்டாவது மொழியாக அது வளர்ந்துவிட்டிருக்கிறது. இங்கிலாந்தில் இருப்பதைக் காட்டிலும் அம்மொழியைப் பேசும் அம்மொழியினரில் பெருந்தொகையினர்வெளி இடங்களில் உள்ளனர் எனக் கூறுவது பொருந்தும்.

"உள்நாட்டு முனையிலும்சரி, உலக முனையிலும்சரி, தென்னிந்தியர் புகழ்விட்டு விளங்குவதற்கு, ஆங்கிலம் உள்ளிட்ட மொழிகளை சொந்த மொழியாகக் கொள்ளும் போக்கே காரணம்.

"சொந்த விவகாரத்திலும், மொழித்துறையிலும் நமக்குள்ள எத்தகையப் பிணக்குகள் இருந்த போதிலும், ஆந்திரத்திலிருந்து வந்துள்ள ஆசிரியர்களும் சென்னை ஆசிரியர்களும் இங்கு ஒன்றுபட்டு இருப்பது இன்பமூட்டும் காட்சியாக இருக்கிறது."

மேற்படி ஆங்கில மொழி புத்துணர்வு வகுப்பு, பிரிட்டிஷ் தூதுவர் அலுவலகச் சார்பில், இத்திங்கள் 27-ந் தேதி முதல் ஜனவரி 7-ந் தேதிவரையில் நடைபெறும். ஆந்திர - சென்னை அரசாங்கக் கல்வி துறைகளின் ஒத்துழைப்புடன் இவ்வகுப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இரு மாநிலங்களிலும் உள்ள உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் இதில் பங்கு கொள்ளுகின்றனர்.

# சென்னையில் சீனக்கலைஞர்கள்

சென்னை, டிச. 28—

சீனக் கலைஞர்களின் குழு, உதவிக் கலாச்சார மந்திரி செவ்-சென்-டு அவர்கள் தலைமையில் நேற்று காலை சென்னை வந்து சேர்ந்தது.

அக்குழுவினருக்கு 'சென்ட்ரல்' ரயில் நிலயத்தில் மகத்தானதோர் வரவேற்பளிக்கப்பட்டது.

மாலையில், மாநில முதல்வர் காமராசரை சந்தித்தபின், அக்குழுவினர் பத்திரிகையாளரைச் சந்தித்தனர்.

பத்திரிகையாளரிடம் பேசுகையில், சீனா விடுதலை பெற்றபின் சீனாவின் பழங் கலைகள் எல்லாம் புத்துயிர் பெற்றனவென்றும், கலைஞர்களின் வாழ்க்கையில் புதியதோர் மலர்ச்சி ஏற்பட்டதாயும், சீன மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதே கலைஞர்களின் பணி என்றும் தெரிவித்தனர். மேலும், சீனாவில் கலைஞர்களுக்கு தங்கள் கருத்துக்களை கலைமூலம் எடுத்துச் சொல்ல சுதந்திரம் தரப்பட்டிருப்பதாயும், கலைப் பூங்காவில் எல்லா மலர்களும் மலர்ந்து மணம் பரப்ப அனுமதிக்கப்படுவதாகவும், குழுத் தலைவர் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் குறிப்பிட்டார்.

சென்னை வரவேற்புக் குழுவின் சார்பில் திருமதி தாரா செரியன் முதலில் அனைவரையும் வரவேற்றார். பத்திரிகையாளர்களுக்கு சீனக் கலைஞர் குழுவினர், தேனீர் விருந்தொன்றளித்தனர்.

மாலை சென்னை நகர சபையின் சார்பில் கலைஞர் குழுவிற்கு ஒரு வரவேற்பளிக்கப்பட்டது. மேயர் திரு. எம். ஏ. சிதம்பரம் அவர்கள் கலைக் குழுவினருக்கு ஒரு வரவேற்பிதழ் வாசித்தளித்ததுடன், வெள்ளித் தாம்பாளம் ஒன்றையும் அளித்தார்

# சென்னை : இந்தியக் கலாசாரத்தின் வாயில்

## சீனக் குழு தலைவர் கருத்து

சென்னை, டிச. 27—

"மேற்கத்திய நாடுகளுக்கு பம்பாய் இந்தியாவின் வாயிலாக இருப்பதுபோல் இந்தியக் கலாச்சாரத்திற்கு சென்னை தான் வாயிலாகும்,"

என்று சென்னை வந்துள்ள சீன கலாச்சார தூதுக் குழுவின் தலைவர் செங்-சென்-டோ சென்னை நகர சபையின் வரவேற்புக்குப் பதிலளிக்கையில் கூறினார்.

வழக்கமாக இந்தியா—சீன மக்களிடை தொடர்பு ஏற்பட இரண்டு வழிகள் இருந்தன—தரை வழியாக இந்தியாவின் வடக்கு பகுதியிலிருந்து செல்லும் கடினமான வழி ; அடுத்து, தெற்கே சென்னையிலிருந்து சீனா செல்லும் கடல் வழி ; நீண்ட காலமாகவே சென்னைக்கும்—சீனாவிற்கும் தொடர்பு இருப்பது இதன் மூலம் தெரிகிறது ; ஆகவே, நாங்கள், சென்னையில் உள்ள நண்பர்களால் வரவேற்கப் படுவதற்கு மகிழ்கிறோம்," என்று அவர் மேலும் கூறினார்.

# மைசூரில் 12,000.....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆகிய மூன்று மின்சார உற்பத்தி நிலயங்களும் வேலை செய்கின்றன என்று தெரிகிறது.

சில இடங்களில் மறியல் நடைபெற்றதைத் தவிர வேலை நிறுத்தம் அமைதியாகநடைபெறுகிறது.

பிரதம எஞ்சினீயரின் அலுவலகத்திலும், மற்ற முக்கிய இடங்களிலும் போலீசார் நிறுத்தப்பட்டிருக்கின்றனர் என்று தெரிகிறது.

# கழகக் கூட்டம்

★

அய்யப்பநாயக்கன்பட்டி
தி. மு. கழக துவக்க விழா
வ. உ. சி. திடலில்

29—12—54 மாலை 6 மணிக்கு

தலைவர் : தா. ஆவுடையப்பன்

பேசுவோர்:

எஸ். முத்து
கே. எஸ். சந்தானம்

# சூடான் மந்திரிகள் மூவர் 'டிஸ்மிஸ்!'

## எகிப்துடன்தொடர்புகூடாது என்ற குரல் வலுக்கிறது

### மந்திரி சபை கவிழும் ?

சூடான் மந்திரி சபையில், எகிப்திய நாட்டுடன் சூடான் சேர்ந்திருக்கும் பிரச்சினையில் பிளவு ஏற்பட்டிருப்பதாயும், அதையொட்டி எகிப்திலிருந்து சூடான் தனித்துவிட வேண்டுமென கோரும் மூன்றுமந்திரிகள், மந்திரி சபையிலிருந்து வெளியேற்றப்பட்டார்கள் என்றும் செய்திகள் வெளிவந்துள்ளன.

லெப்டினனட் - கர்னல் காலா பல்லா காலிட் — பாதுகாப்பு மந்திரி ; சையத் மீர்கான் ஹம்சா—கல்வி, விவசாய இலாகா மந்திரி ; அகமத் கெலி — அரசாங்க இலாகா மந்திரி ஆகிய மூவரும் வெளியேற்றப்பட்டவர்கள்.

பாதுகாப்பிலாகா பொறுப்பை பிரதமர் இஸ்மெயில் எல்அஜ்ஹாரி ஏற்றுக்கொண்டிருக்கிறாராம்.

மூன்று மந்திரிகளின் பதவி நீக்கம் எகிப்திற்குப் பெரியதோர் வெற்றி எனப் பத்திரிகைகள் வர்ணித்திருக்கின்றன.

பதவியை விட்டு விலகிய மூன்று மந்திரிகளும் புதியதாக ஒரு சுதந்திர இயக்கம் ஆரம்பிப்பது பற்றியோ, அல்லது ஏற்கனவே எகிப்துடன் சூடான் சேர்ந்திருப்பதை எதிர்க்கிற குழுவினருடன் சேர்ந்து சூடானுக்கும் எகிப்திற்கும் இருக்கும் 'யூனியன்' தொடர்பை அறுப்பதற்காகப் பாடுபடுவது பற்றியோ யோசித்து வருகின்றனராம்.

விலக்கப்பட்ட மந்திரிகளுக்கு 'காட்மீய' மதத்தவரின் ஆதரவு இருப்பதாகவும், 'காட்மீய' மதத் தலைவரான சையத் அலி எல்மீர்கான் எகிப்திலிருந்து திரும்பியதும் விலக்கப்பட்ட அந்த மந்திரிகளுக்கு ஆதரவு தருவாரேயானால் சூடான் மந்திரி சபை கவிழும் என்றும் சொல்லப்படுகிறது.

# 'காலனி ஆதிக்கம் ஒழிக!'

## ஜகார்தா பொதுக்கூட்டத்தில் கோஷம்!

இந்தியா, இந்தோனேஷ்யா, பாகிஸ்தான், பர்மா ஆகிய நாடுகளின் பிரதம மந்திரிகள் இந்தோனேஷ்யாவில் நடைபெறும் இரண்டாவது கொழும்பு மாநாடுகள் கூட்டத்தில் கலந்துகொள்ள ஜகார்தா வந்து சேர்ந்தனர். எல்லோரும் தனித் தனி விமானங்களில் வந்தனர்.

போகரில், இம்மாநாடு ஆரம்பமாகிறது.

காலனி ஆதிக்கத்தை ஒழிப்பது பற்றி மாநாட்டில் விவாதிக்கப்படுமாம் ; அண்மையில் நடைபெற இருக்கும் ஆசிய — ஆப்பிரிக்க மாநாட்டிற்கு சீனாவையும், ஜப்பானையும் அழைப்பது பற்றியும் முடிவு செய்யப்படலாம்.

ஆஸ்திரேலியா, நியூசிலாந்து ஆகிய நாடுகளும் ஆசியாவுடன் தொடர்பு கொண்டவை என்றும், அவைகளையும் அந்த மாநாட்டிற்கு அழைக்க வேண்டும் என்று இலங்கை விரும்புகிறதாகச் சொல்லப்படும் வதந்திகள் பயன் தராதவை என்று தெரிகிறது.

விமான நிலயத்தில், தன்னைச் சூழ்ந்துகொண்ட பத்திரிகை நிருபர்களிடம் எதுவும் கூற பண்டித நேரு மறுத்துவிட்டார்.

"நான் இங்கே வேடிக்கை செய்ய வரவில்லை ; ஒரு வேலையை முன்னிட்டு வந்திருக்கிறேன் ; பின்னர் நீங்கள் விரும்பினால் உங்களைச் சந்திக்கிறேன்," என்று பண்டிதநேரு நிருபர்களிடம் கூறினாராம்.

பாகிஸ்தான் பிரதமர் முகமது அலி பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில், 'அடுத்து நடைபெறும் ஆசிய-ஆப்பிரிக்க மாநாட்டிற்கு இது ஏற்பாடு செய்யும் மாநாடு,' என்றார். இந்த மாநாட்டினால் நல்ல பயன் விளையுமென தாங்கள் கருதுவதாக அவர் மேலும் கூறினார்.

ஐந்து நாடுகளின் பிரதமர்களும், போகரில் மாநாடு முடிவடைந்ததும், ஜகார்தாவில் பொதுக்கூட்டமொன்றில் பேசுவார்கள் என்றும், கூட்டத்தில், "காலனி ஆதிக்கம் ஒழியட்டும்" என்று கோஷமிடப்படும் என்றும் இந்தோனேஷ்ய செய்தி இலாகா அறிவித்தது.

# நீர்ப்பாசன வசதிகளை.........

(2 ம் பக்கத்தின் தொடர்ச்சி)

விழுகின்ற தண்ணீரைத் தடுக்க முயற்சிகள் மேற்கொள்வதிலும் நிச்சயமாக இடம் இருக்கிறது.

"தற்போது சென்னை மாநிலத்திலுள்ள மொத்தம் சுமார் 25,000 ஏரிகளையும் அபிவிருத்தி செய்ய வேண்டும். இதைச் செய்தால் குறைந்த அளவு ஒரு இலட்சம் ஏகர் நிலத்துக்காவது சாகுபடி வசதி அதிகம் கிடைக்கும். அதோடு புதிய ஏரிகளும் நிர்மாணிக்கப்பட வேண்டும்.

"மேலும், போதிய அளவு நீர்ப்பாசன வசதிக்காக, மேற்குத் தொடர்ச்சி மலைகளில் பெய்கின்ற மழைநீர் வீணாகக் கடலில் போய் விழுவதைத் தடுத்து, அந்த நீர்ப்பாசனத்துக்குப் பயன்படச் செய்ய முக்கியமான இடங்களில் மலைகளைக் குடைந்து குகைகள் (டன்னல்கள்) அமைக்க வேண்டும்,"

இவ்வாறு, இந்திய எஞ்சினீயர்கள் கழக சென்னை நிலயத்தின் 32-வது ஆண்டு மகாசபைக் கூட்டத்திற்குத் தலைமை வகித்துப் பேசிய சென்னை மராமத்து இலாகாவின் பிரதம எஞ்சினீயரான ஆனந்தராவ் குறிப்பிட்டார்.

மேலும் அவர், காவேரி, மாலம்புழை, பவானி போன்ற நதிகளில் ஏற்கனவே அணைகள் கட்டப்பட்டுவிட்டதென்றும், உடுமலைக்கருகில் அமராவதி நதியிலும், சாத்தனூருக்கு அருகே பொன்னி ஆற்றிலும், கல்லிடைக்குறிச்சிக் கருகில் மணிமுத்தாறிலும், நரசிங்கபுரத்தில் வைகையாற்றிலும், மலபார் மாவட்டத்தில் வாளயாறு, மங்களம் ஆகியவற்றிலும் அணைத் திட்ட வேலைகள் நடைபெற்று வருகிறதாகவும், கிருஷ்ணகிரிக்குப் பக்கத்தில் பெண்ணை ஆற்றில் மற்றொரு அணைக்கட்டு ஆரம்பிக்கப்படலாமென்றும் தெரிவித்தார்.

மேலும் அவர் பேசியதாவது:—

"இம்மாநிலத்திலுள்ள குளங்களைச் சரியாக வைத்துக்கொள்வதில் அதிகக் கவனமாக இருக்க வேண்டும். குத்துமதிப்பாக 121 குளங்களைப் பரிசோதித்துப் பார்த்ததில் 13 குளங்களில் 50 சதவிகிதத்துக்கு மேலும், 51 குளங்களில் 25 முதல் 50 சதவிகிதமும், வேறு 50 குளங்களில் 10 முதல் 25 சதவிகிதமும், மீதியான 11 குளங்களில் 10 சதவிகிதத்துக்குக் குறைவாகவும் 'தூர்' படிந்திருந்தது. இதிலிருந்து இங்குள்ள குளங்களெல்லாம் சரியான நிலையில் இல்லை என்பது தெரியவருகிறது. இவைகளுக்கெல்லாம் தக்க நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளாவிட்டால் பல குளங்கள் காலப் போக்கில் அடியோடு தூர்ந்தே போய்விடுவதோடன்றி மறுபடியும் அவை உபயோகத்துக்கு லாயக்கற்றதாகிவிடும்.

இம்மாநிலத்திலுள்ள மொத்தம் 25,300 குளங்களும், 25 லட்சம் ஏகர் நிலங்களுக்கு நீர்ப்பாசன வசதி அளித்து வருகின்றன. இவ்வளவு வசதிகள் செய்து தருகின்ற அக்குளங்கள் தூர்ந்து பாழாகிப் போய்விடாமல் பார்த்துக்கொள்ள வேண்டிய கடமை எஞ்சினீயர்களுடையதேயாகும்.

சென்னை மாநில எஞ்சினீயர்களுக்கு இது ஒரு சவால். இந்தச் சவாலுக்கு நீங்கள் (எஞ்சினீயர்கள்) ஏதாவது ஒரு பரிகாரம் கூறுவீர்களென்றே நான் நம்புகிறேன்.

குளங்களும் மிகப் பெரிய அளவினதாயிராமல், 200-ம் அதற்கும் குறைவான அளவு ஏகரா நிலங்களுக்குப் பாசன வசதி அளிக்கும் வகையில் சக்தியுடையதாக இருத்தல் வேண்டும். இம்மாதிரியான குளங்களுக்கு, அதிகச் செலவில் மதகுகள் போன்ற கட்டுமான வேலைகள் தேவையில்லை. கரைகள் மட்டுமே அமைத்தால் போதுமானதாகும்.

இந்த வேலைகளுக்கு, சாகுபடி நடைபெறாத காலங்களில் வேலையின்றி இருப்பவர்களையே அமர்த்திக் கொள்ளலாம்.

மாநிலத்திலுள்ள எல்லா மாவட்டங்களிலும், சிறு சிறு குளங்களை வெட்டுவதற்கான ஒரு திட்டத்தை ஆரம்பிப்பதில் விசேட கவனம் எடுத்துக் கொள்ளும்படி மாநில சர்க்காரையும், எஞ்சினீயர்களையும் கேட்டுக் கொள்கிறேன்."

### சொற் பயிற்சிக் கூட்டம்

20-12-54 மாலை 6 மணிக்கு, சென்னை 5-வது வட்ட தி. மு. கழகச் சார்பில், தோழர் ஈ. கே. பார்த்தசாரதி தலைமையில், 'சமுதாயத் துறையில் நாம்' என்னும் பொருள் பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

# நெய்வேலி:

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ரூ. 58 கோடி மதிப்புள்ள இத்திட்டத்தின் மூலம் கீழ்க்கண்ட தொழில்கள் நெய்வேலியில் துவங்கும் என்று தெரிகிறது :—

1. ஆண்டு ஒன்றுக்கு 3·25 மில்லியன் டன் நிலக்கரி எடுத்தல் ;
2. 2,00,000 கிலோவாட் சக்தியுள்ள மின்சார உற்பத்தி நிலயம் ;
3. 2,00,000 அம்மோனியம் சல்பேட் என்ற உரம் தயாரித்தல்.
4. பாய்லர்களுக்காக 7,00,000 டன் நிலக்கரி ;
5. 3,50,000 டன் கார்பனைஸ்டு கரிக்கட்டிகள் தயாரித்தல்.

"இத்திட்டம், இரு சர்க்கார்களின் கூட்டு முயற்சியா?" என்று கேட்டபோது, மத்திய சர்க்கார் அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி, "இத்திட்டம் இரு சர்க்கார்களின் கூட்டுத் திட்டமே என்றாலும், பயன் அடைவது சென்னையே ; சென்னைக்கு மத்திய சர்க்காரிடமிருந்து பொருளாதார, தொழில் நுணுக்க உதவி தேவை," என்று பதில் அளித்தாராம்.

### ஈரோடு வள்ளுவர் மன்றம்

ஜனவரி திங்கள் 15, 16 நாட்களில், பொங்கல் விழாவை ஈரோடு பெரியார் நகர மன்றத்தில் நடைபெற ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மாணவர்களுக்கான பேச்சுப் போட்டிகளும், இசைப் போட்டிகளும் நடைபெறும். 16—1—54 இரவு, மறுமலர்ச்சி மன்றத்தாரால் 'சாந்தா' எனும் நாடகம் நடைபெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

### மதுரை — மாகாளிப்பட்டி நெடுஞ்செழியன் மன்றம்

19—12—54ல், தோழர் சுப. இராமநாதன் தலைமையில் நடைபெற்ற மன்றச் செயற்குழு உறுப்பினர் கூட்டத்தில் பொங்கல் விழா நடத்துவதெனவும், மதுரை மாவட்ட மாநாடுகள் சிறப்புற நடைபெறுவது பற்றியும் முடிவு செய்யப்பட்டு, புதிய நாடக மசோதாவை கண்டித்தும், தோழர் கே. ஆர். இராமசாமி அவர்கள் தாயார் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

பெண்கள் இயக்கத்தின் கீழ் தேசிய சேமிப்புப் பத்திரங்களின் விற்பனை மூலம் இதுவரை மொத்தம்ரூ. 91 லட்சம் வசூலாகியுள்ளது

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : சி. என். அண்ணாதுரை, எம். ஏ.,

